# ஸஹாபாக்களின் த'வா எவ்வாறு இருந்தது?

## WHAT WAS THE METHOD OF DA'WAH OF THE SAHABA



அஷ்-ஷேக் இமாம் அன்வர் அல்-அவ்லாக்கி (ரஹ்) அவர்களின்
அபூ பக்ர் (ரலி) அவர்கள் பற்றிய விரிவுரை தொடரிலிருந்து எடுக்கப்பட்டது.

**TRANSLATED FROM THE LECTURES OF IMAAM ANWAR AL-AWLAKI**




தமிழ் மொழிபெயர்ப்பு:
உலக இஸ்லாமிய ஊடக முன்னணி - இந்திய துணைக்கண்டம்

**ஸஹாபாக்களின் த'வா எவ்வாறு இருந்தது?**

ஸஹாபாக்கள் டமஸ்கஸ் மற்றும் ஜெருசலேம் ஆகிய இடங்களில் த'வா செய்வதற்காக துண்டு பிரசுரம் விநியோகிக்க ஹிரக்களிடம் அனுமதி கேட்டு அபூ பகர் (ரலி) அவர்கள் கடிதம் அனுப்பினார்களா? அல்லது, ரோமன் இராச்சியத்திற்கு எதிராக யுத்தம் செய்ய முன் அங்கு இருந்த ஒவ்வொரு தனிமனிதனையும் சந்தித்து ஸஹாபாக்கள் த'வா கொடுத்தர்களா? இல்லை என்பதே ஒரே பதிலாகும். அல்லாஹ்வி ன் தூதர் (ஸல்) மற்றும் அன்னாரின் சஹாபாக்களின் த'வா சமூகத்தின் தலைவர்களுக்கு மட்டுப்பட்டிருந்தது. அவர்கள் பொது மக்களிடம் போகாமல் நேரடியாக அம்மக்களின் தலைவர்களிடமே செல்வார்கள். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், பாரசீகத்தில் மற்றும் ரோமாபுரியில் வசித்த ஒவ்வொரு குடிமகனுக்கும் கடிதம் அனுப்பி த'வா கொடுக்கவில்லை. அல்லது, அரபு கோத்திரங்களின் ஒவ்வொரு உறுப்பிணர்க ளுக்கும் கடிதம் அனுப்பவில்லை. மாறாக அன்னார் மக்களின் தலைமைகளிடமே செல்வர்கள். ஹஜ் காலங்களில் அன்னார் த'வா செய்யும் போது மக்களின் தலைவர்களையே சந்திப்பார்கள். தாயிப் இற்கு சென்ற வேளையில்கூட அன்னார் தலைவர்களையே சந்தித்தார்கள். அத்தலைவர்கள் இஸ்லாத்தை ஏற்றுக்கொண்டால், அவர்களுக்கு கீழ் உள்ள அனைவரும் இஸ்லாத்தை ஏற்றுக்கொண்டதாக கருதப்பட்டார்க ள். தலைவர்கள் இஸ்லாத்தை ஏற்றுக்கொள்ள வில்லை என்றால், அவர்களுக்கு கீழுள்ளவர்களும் இஸ்லாத்தை நிராகரித்தவர்களாக கொள்ளப்பட்டார்கள்.

ஹிரக்கள் இஸ்லாமிய அழைப்பை நிராகரித்ததனால், அவனுக்கெதிராகவும் அவனது மக்களுக்கு எதிராகவும் போர்தொடுக்க முஸ்லிம்களுக்கு உரிமை கிடைக்கின்றது. கிஸ்ரா அல்லாஹ்வின் தூதரின் (ஸல்) கடிதத்தை கிழித்தெறிந்த போது, அவனுக்கு எதிராகவும், இஸ்லாமிய அழைப்பை பற்றி ஒரு துளியும் அறியாதிருந்த அவனின் மக்களுக்கு எதிராகவும் அபூ பகர் (ரலி) அவர்கள், பெரும் படை அனுப்பினார்கள்.

எமக்கு மத்தியில் ஒரு பிழையான கருத்து இருக்கின்றது, அதாவது, நாம் எம்மை முழுமையாக சீர் செய்த பின்னர்தான் அல்லாஹ்வின் பாதையில் யுத்தம் செய்வது கடமையா கிறது என்று. இன்னும் நாம் நினைத்துகொண்டு இருக்கொறோம் அல்லாஹ்வின் பாதையில் யுத்தம் செய்ய முன்னர் பல ஏற்பாடுகளை செய்யவேண்டு மென்று. அல்லாஹ்வின் தூதர் (ஸல்) மதீனாவில் இருந்து படைகளை அனுப்பும் போது யாராவது புதிதாக இஸ்லாத்தை ஏற்றுக்கொண்டால், அன்னார் அந்த புதிய முஸ்லிமை உடனடியாக அப்படைகளுடன் சேர்த்து அனுப்புவா ர்கள். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் யாரையும் படைகளுடன் அனுப்ப முன்னர் மாத கணக்கிலும் வருடக்கணக்கிலும் எந்தவித ஆன்மீக பயிற்சி பாசறைகளுக்கும் அனுப்பவில்லை.

ஒருமுறை, யூத மதத்தை சேர்ந்த 'முகைரி' என்பவர் உகத் போரின் போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் வந்து, அல்லாஹ்வி ன் தூதரே நானும் உங்களுடன் இணைய வேண்டும் என்று சொன்னார். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் முகைரியிடம் தாம் முஸ்லிமா என்று கேட்டார்கள். அதற்கு அவர் கலிமாவை சொல்லி இஸ்லாத்தை ஏற்றுக்கொண்டார். உடனே அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் முகைரியை முஸ்லிம் படையில் சேர்த்துக்கொண்டார்கள். ஒரு தொழுகைகூட தோழாத, ஒரு நோன்புகூட நோற்காத முகைரி உகத் போர்களத்தில் அல்லாஹ்வின் பாதையில் போர் புரிந்து தன் உயிரை நீத்து சஹாதத் எனும் உயர் பதவியை அடைந்தார். பின்பு முகைரியை பற்றி அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் குறிப்பிடும்போது, 'முகைரி யூதர்களில் மிக சிறந்தவர்' என போற்றினார்கள்.

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் முகைரியை முஸ்லிம் படையில் சேர்க்கமுன்னர், சில வருடங்கள் 'ஜிஹாத் அன்-நப்ஸ்' செய்து தேர்ச்சி பெற வேண்டுஎன்றோ, அல்லது முதலில் 'ஜிஹாத் அல்-அக்பர்' செய்த பின்னர் 'ஜிஹாத் அல்-அஸ்கர்' இல் சேர்ந்து கொள்ளலாம் என்றோ சொல்லவில்லை. மாறாக இந்த கருத்துக்களெல்லாம் புதிய உருவாக்கங்களாகும்.

என்றாலும், இந்த சட்டத்துக்கு ஒரேயொரு விதிவிலக்கு இருக்கின்றது. இஸ்லாத்தை முதன் முதலில் ஏற்றுக்கொண்ட மக்கா முஸ்லிம்கள் அல்லாஹ்வின் பாதையில் போர் புரிய முன்னர் ஒரு ஆன்மீக பயிற்சி செய்ய வேண்டிய நிலைப்பாடு இருந்தது. காரணம் அவர்களின் எண்ணிக்கை மிகவுக் குறைவாகவும், அவர்கள் இஸ்லாத்தின் அத்திவாரமாகவும் இருந்ததனாலாகும். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவரகளுக்கு ஒரு சிலரை சேர்த்துக்கொண்டு மக்கா காபிர்களுடன் திடீரென யுத்தம் செய்வது சாத்தியமற்றதாகும். ஆகவே, இஸ்லாத்தின் அரம்பகர்தாக்களான இச்சிறிய முஸ்லிம் குழு ஒரு விஷேட பயிற்சியை 13 வருடங்களுக்கு மேற்கொள்ள வேண்டிய நிர்ப்பந்தம் இருந்தது. ஆனாலும், இஸ்லாமிய சரீயா சட்டங்கள் யாவதும் நிறைவடைந்து, இஸ்லாமிய மார்க்கம் பூர்த்தியான பின்னர் வரும் அனைத்து தலைமுறைகளும் பூர்த்தியாக்கப்பட்ட அல்லாஹ்வின் கடைசி சட்டதிட்டங்களையே பின்பற்ற வேண்டும்.

மக்காவில் மது அருந்துதல் தடை செய்யப்பட்டது 4 கட்டங்களாக என்பதனால், இஸ்லாத்தில் புதிதாக இனைந்து கொண்ட யாரையும் பார்த்து, 'உங்களுக்கு 13 வருடங்களுக்கு மது அருந்தலாம்' என்று யாரும் சொல்வதில்லை. அல்லது, மக்கவாசிகளை போன்று '13 வருடங்களுக்கு பின்னர் நோன்பு நோற்கலாம்' என்று யாரும் சொல்வதில்லை. ஆனால், ஜிஹாத் என்று வரும் போது மாத்திரம் நாம் ஏன் நோன்பையும், மது தடைசெய்யப்பட்டதையும் விட வித்தியாசமாக செயற்படுகிறோம்? புனித அல்-குர்'ஆனில் நோன்பையும் ஜிஹாதையும் பரிந்துரைக்கும் வசனங்கள் ஒரே வடிவத்தில் தான் இறக்கப்பட்டுள்ளது. 'குதிப அலைக்கும் அஸ்-ஸியாம்' என்ற வசனமும், 'குதிப அலைக்கும் அல்-ஜிஹாத்' என்ற வசனமும் கிட்டத்தட்ட ஒரே காலப்பகுதியில் இறக்கப்பட்டன. இவ்வாறிருந்தும் நாம் ஏன் யாராவது ஒருவர் இஸ்லாத்தை தழுவினால் நோன்பை ஒரு விதமாகவும் ஜிஹாதை இன்னொரு விதமாகவும் கையாள்கின்றோம்? ஏன் இந்த இரட்டை நிலைப்பாடு? இது எங்கிருந்து வந்தது? இது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களினதோ, அபூ பகர் (ரல்) அவர்களினதோ வழிமுறையே அல்ல.

Global Islamic Media Front

அபூ பகர் (ரல்) அவர்களின் காலத்தில் யேமன் நாட்டிலிருந்து இஸ்லாமிய படைகளில் சேர்ந்து கொள்ள வந்த அனைவரும் புதிய முஸ்லிம்கள் ஆகும். அவர்களுக்குரிய தர்பியா (பயிற்சி) நேரடியாக போர்களத்திலேயே கொடுக்கப்பட்டது. போர்களத்தை விட சிறந்த பயிற்சிப்பாசறை வேறெங்குள்ளது? பொறுமை, அல்லாஹ்வின் மீது தவக்குல் (நம்பிக்கை), தியாகம் ஆகியவற்றை படிக்க போர்களத்தை விட வேறென்ன கலாசாலை உள்ளது? ஆகவே, பயிற்சிப்பாசறை என்று சொல்லிக்கொள்ளும் எல்லா திட்டங்களும் அவற்றில் கலந்துகொள்பவர்களை இருப்பதை விட மேலும் கோழைகளாக மாற்றுவதைவிட வேறொண்டையும் அடையாது.

பாலஸ்தீனத்தில் உள்ள எமது சகோதர சகோதரிகளின் சில அனுபவங்களை பார்க்கும்போது, அவை நேரடியாகவே போர்களத்தில் இருந்து பெறப்பட்டது தெளிவாகின்றது. அவர்களுக்கு இருக்கின்ற அனுப்பவங்கள் எந்த புத்தகத்தாலும் எந்த பெரிய ஷேய்க் வந்தாலும்

கற்றுகொடுக்க முடியாதனவாகும். ஒருமுறை, பாலஸ்தீன போராட்டத்தின் ஒரு தலைவரான அப்துல் அசீஸ் அல்-ரன்தீசி இற்கு எதிராக இஸ்ரேலிய இராணும் படுகொலை முயற்சியை மேற்கொண்டது. அம்முயற்சி தோல்வியடைந்து சில மணித்தியாலங்களின் பின்னர் அல்-ஜசீரா தொலைகாட்சிக்கு பேட்டி கொடுத்த அல்-ரன்தீசி 5 நட்சத்திர ஹோட்டல் இலிருந்து வெளியே வந்தவர் போல அதிசயமாக புன்முறுவலுடன் காணப்பட்டார். எந்த பயிற்சிபாசறையில் படுகொலை முயற்சிக்குப்பின் புன்முறுவலுடன் இருக்க பயிற்சி வழங்க படுகிறது? அவரின் மனைவி கருத்து தெரிவிக்கும்போது, தானும், தன் குழந்தைகளும் எந்த நேரத்திலும், அல்லாஹ்வின் பாதையில் உயிர் நீக்க தயார் நிலையில் இருப்பதாக கூறினார். ஆகவே, அவர்கள் கடந்து செல்லும் ஒவ்வொரு அனுபவமும் அவர்களுக்கு தர்பியா வாக மாறுகின்றது.

ஆகவே நம் மத்தியில் உள்ள பிழையா ன கருத்துக்களை திருத்திக்கொ காள்ள வேண்டும். ஸஹாபாக்களின் வாழ்க்கை வரலாறுகளை படிப்பதினூடாக உலக பண்பாட்டால் எம்மத்தியில் குடிகொண்டுள்ள பிழையான கோட்பாடுகளை அடையாளம் காண்பது இலகுவானதாக இருக்கும். காலித் பின் வலீத் (ரல்) அவர்களுக்கு முன்பாக, சமகால பேச்சாளர் ஒருவருக்கு ஜிஹாத் பற்றி உரையாற்ற கொடுத்தால், நிச்சயமா க அவர்கள், 'இது என்ன கோழைகளின் இஸ்லாம்' என்று சொல்வார்கள். காலித் பின் வலீத் (ரல்) அவர்களை பொருத்தவரையில், 'இஸ்லாத்தை ஏற்றுக்கொள், இல்லாவிடின் ஜிஸ்யா கட்டும்வரை யுத்தம்' என்பது தான் அவர்களின் கோட்பாடாக இருந்தது.

எனவே, அன்புக்கு ரிய, சகோதர சகோதரிகளே, எந்த மாற்றத்துக்கும் முன்னர் அறிவுசார் மாற்றம் முக்கியமா னதாகும். எமது நிலைமைகள் மாறவேண்டுமென்றால் நாம் முதலில் எமது கோட்பாடுகளை சீர்செய்துகொள்ள வேண்டும். எமது மூலையில் ஆழப்பதிந்துள்ள தப்பான கருத்துக்கள் களையப்பட்டு, அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களினதும், அன்னாரின் ஸஹாபாக்களினதும் வழிமுறையை போதிக்க வேண்டும். எமக்கும் உலகத்துக்கும் உள்ள தொடர்பு, எமக்கும் முஸ்லிம் சமூகத்துக்கும் உள்ள தொடர்பு, இஸ்லாத்திற்க ாக எம்மால் நிறைவேற்றப்படவேண்டிய கடமைகள் என்பன மீள் பரிசீலிக்கப்பட வேண்டும். இறுதியாக நல்ல முடிவு, இறையச்சம் கொண்டவர்களுக்கே!

Global Islamic Media Front

அஷ்-ஷேக் இமாம் அன்வர் அல்-அவ்லாக்கி (ரஹ்) அவர்களின்
அபூ பக்ர் (ரலி) அவர்கள் பற்றிய விரிவுரை தொடரிலிருந்து எடுக்கப்பட்டது.

SHAWWAL 1437